ஓம்

விநாயகர் துணை

**திருநெல்வேலி கம்பபாத சேகரன் இ. சங்கரன் இயற்றிய**

**திருநெல்வேலித் தல விநாயகர்**

**பொள்ளாப் பிள்ளையார் பதிகம்**

அகர உகர மகரநாத விந்தாய் அமைந்த ஓங்காரா
நிகரில் தெய்வம் விலங்குடனே பூத வடிவு புணர்கோலம்
பகர அமைந்த மூவுருவே பாதம் பணிவார் இடர்களைவாய்
புகழ்சேர் பெருமை சான்றோர்வாழ் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 1.

சிலம்பு புலம்பு சேவடியும் சிவந்த பட்டு திருஇடையும்
நிலவும் நதியும் சேர்முடியும் நிறைந்த அகட்டுப் பேரழகும்
இலங்கு சுளவு பெருஞ்செவியும் ஒற்றை மருப்பு திருமுகமும்
நலங்கொள் காட்சி தந்தருள்வாய் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 2.

கங்கை அரவு மதிமுடியும் கண்கள் மூன்றும் சிவம்காட்ட
அங்கை பாசம் அங்குசமும் அன்னை வடிவின் உருக்காட்ட
தொங்கு துதிக்கை சுழன்றிடவே துயரம் நீக்கி அருள்புரிவாய்
சங்கத் தமிழின் சுவைமணக்கும் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 3.

காக்கை வடிவில் குடமுனிவன் கரங்கொள் கரகம் கவிழ்த்தவனே
ஆக்கும் தொழிற்கு முன்னவனாய் அமைந்து நலமே புரிபவனே
போக்கு வரவு அற்றநிலைப் பேறாம் உன்தாள் தந்தருள்வாய்
பாக்கள் போற்றும் புகழ்கொண்ட நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 4.

அரசு நிழலில் அமர்செல்வா ஆலம் அமர்ந்தான் தருஞ்செல்வா
மருதம் முறித்தான் திருமருகா கடம்ப தாரன் அண்ணாவே
கரவில் தொழும்பர் குழாத்துடனே கூடி தொண்டு செயஅருள்வாய்
உரம்சேர் சைவர் வாழ்நகராம் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 5.

கரும்பு பயறு பால்தேன் நெய் கலந்தும் கனிகள் பலகிழங்கு
உருண்டை இலட்டு மோதகமும் இளநீர் அப்பம் பணியாரம்
பொரியும் அவலும் படையலிட்டேன் பிறவா நெறியை உணர்த்திடுவாய்
திருவாள் வதியும் திருநகராம் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 6.

நகைத்த மதியை சாபமிட்டு அவன்செய் பூசை ஏற்றவனே
நகையால் புரத்தை எரிக்கசெலும் தேரை நகழா நிலைசெய்தாய்
பகையாம் மிடியில் படுதுயரை பரிந்து நீக்கி அருள்புரிவாய்
நகைசேர் வதன வள்ளல்வாழ் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 7.

எருக்கு வன்னி அறுகுதும்பை ஏடு மலரால் அருச்சித்து
உருகி தமிழால் உனைபோற்றி உலகில் பிறந்த பயன்எய்த
செருக்கா அமர்செய் கயமுகனை ஆகு ஆக்கி சீராய்தம்
பரியாய் கொண்ட நீ அருள்வாய் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 8.

பிணிஇல் மேனி நற்செல்வம் பீடார் கல்வி சீர்த்தியுடன்
துணிவு வீரம் தூயசொலும் துணையாய் நல்லாள் வாழ்வு இறை
பணிசெய் தொழும்பர் நல்வுறவும் பாங்காய் எமக்கு கூட்டுவிப்பாய்
அணியார் பொருநை வளஞ்செய்யும் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 9.

நவகோள் நலமே புரிந்திடவும் நல்ல மக்கள் அமைந்திடவும்
தவத்தர் யோக ஆதாரத் தலத்து சுடரை காணசெய்வாய்
துவளும் உயிர்கள் பதிசேர தூய நெறியைக் காட்டிடுவாய்
புவனம் போற்று பெருமைகொளும் நெல்லை பொள்ளாப் பிள்ளையாரே 10.

முற்றும்

``இதுவே இப்பிள்ளையாரின் முதல் பிரபந்தம் ஆகும்”